ஸ்ரீ

# மாறனேர் நம்பி சரித்ரம்.

OR

# The Gospel of Service.



ஆசிரியர்:
திருப்பேரை, P. ஸ்ரீநிவாஸாசாரியார்,
(திருநெல்வேலிப்பாலம்.)

---

VELAYUDHAM PRINTING PRESS,
TUTICORIN.

---



1919

# உரிமையுரை.



பாகவதாபிமானியும்,

தேசாபிமானியும், செந்தமிழ்ச் செல்வரும்,

ஓர் மெய்யன்பருமான

ஸ்ரீமாந். வேதநாயகம்பிள்ளை அவர்கள் M. A. B. L.

(வக்கீல், வண்ணார்பேட்டை.)

இப்புண்ய சரித்ரத்தில், ஈடுபட்டு,

வெளியிட்ட மெய்யன்பிற்கு ஓர் அறிகுறியாக

இந்நூல் எழுதப்பட்டது.

## FOREWORD.

It is a well-known fact that Vaishnavism, with its imperishable wealth of stories of the lives and sayings of the celebrated Alwars (saints) and Acharyas (sages) and with its sublime Philosophy of Life, broad-based upon Humanity, lays, above all, great stress on *Service* as the Path of Salvation and as the one sure basis of inter caste relations in the Society of the *Bhagavatas*.

The present writer believes that the story, narrated herein, of the life of a Panchama saint (who lived in the 10th century A. D. during the reign of Raja Raja Chola, the Great) can not but inspire its readers to selfless service and that there can be no more eloquent preaching of the Gospel of strenuous spiritual life (dedicated to love and service) than the glorious example of the revered old Peria Nambi (a Brahman of Brahmans and the Teacher of Sri Ramanuja) ministering, day by day, month by month, to the needs of the 'low caste' fellow-disciple of his, who was suffering from a malignant form of leprosy.

The teaching of the story is obvious. It illustrates the meaning and value of 'service to devotees' (Bhaga-

vatha-Kainkaryam) which, according to the Vaishnavas, is more necessary for salvation than 'service at the Feet of the Divine Lord Himself' (Bhagavad-Kainkaryam).

Learn to love and serve thy fellows—the 'elect' of God—regardless of caste, colour or position in life, with perfect faith and reverence and a true spirit of humility. *Where Love is Life, Joy becomes service*—such is the lesson, the central thought, of the life-story of our saint, *Maraner Nambi*, who, in the pursuit of his Ideal, scorned ease and trod the way of suffering: such is also the truth, so marvellously illustrated by the example of the great *Acharya* (Preceptor), Peria Nambi himself!

Tinnevelly Bridge,<br>28—3—1919.

*P. S. Acharya.*

# முன்னுரை.



நமது நாட்டிலே 'பிறதொழில்களால் பொருள் எய்திய வழியும் உணவின்பொருட்டு உழுவார்கட் செல்ல வேண்டுதலின்' "உழுந்தும் உழவே தலை" என்றும், "உழுவார் உலகத்தார்க்கு ஆணி" என்றும், "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என்றும் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் உழவினது சிறப்பைக் கூறுகிறார்.

இத்தகைய உழுதல் தொழிலினையே கைக்கொண்டு நமது கதாநாயகர், மாறனேர் நம்பி, தமது அகத்திலே ஸத்யமாகிய உழவைச் செய்தார்; முதல்வன் திருநாமமாகிய வித்தை விதைத்தார். அவனருளால் அவனது 'நாமம் கற்ற ஆவலிப்பு' (பெருமிதம்) என்னும் நீரைப்பாய்ச்சி, 'காவலிற் புலனை வைத்து' அறை கூவி, மரணபயம், கவலை யாதியவற்றை அடியிட்டுத் துவைத்தார்.

"கடினமான பூமியைப் பிளந்து உழுது பயிரிடும் உழவன் பக்கத்திலும், கற்களையுடைத்துப் பாதையமைப்போன் பக்கத்திலும் இருப்பான் அவன். அவர்களோடு, வெயிலிலும் மழையிலும், தன் பொன்னுடை (பீதாம்பரம்) புழுதிபடியக் கலந்திருப்பான். "பரம ஏழைகளும், வெகு நைச்சியமுள்ளவர்களும், பற்றற விட்டவர்களும் இருக்கும் இடம் அன்றோ உன் திருவடி நிலை!" என்று தமது கீதாஞ்சலியில் மஹாகவி ரவீந்த்ரநாதர் கூறுவர்.

புத்தமிர்தமாகிய இவ்வுண்மையை நன்கு விளக்குவது மாறனேர் நம்பி சரித்ரம். இது ஓர் பழைய சரித்ரம்; குருபரம்பரா

ப்ரபாவம் ஆதிய நூல்களினின்றும் தொகுக்கப்பட்டுப் புதியவுரையாக, ஸ்திரீகளும், புருஷர்களும், மாணவரும், பிறரும், படித்து இன்புறும் வண்ணம், ஜனரம்யமான தமிழில் எழுதப்பெற்றுள்ளது.

இதுபோன்ற சிறு புஸ்தகங்கள் பல, யாவர்க்கும் மனோஹரமான நடையில் வெளிவரும்.

தாய்மொழியைப் போற்றுவோரும், நமது சமய உண்மைகளை அறிய விரும்புவோரும், வாசித்து மங்களம் அடைவாராக.

திருப்பேரை,
ஸ்ரீநிவாஸாசார்யன்.

# நூல்.

குலந்தரும் என்ற அருமறைப் பொருளைக்
குவலயம் எலாம் இனிதோங்க
நலந்தரு சொல்லாய் நாரணன் அடியார்
நமக்கருள் செய்தமை நவில்வாம்
புலன் உழுதுண்ணும் மாறனேர் நம்பி
புழுமலி குரம்பையை மேனாள்
தலத்தொழும் பெரியநம்பி செய் பிரப-
சரம-நற்செயல் இனிதோர்ந்தே.

என் உயிர்க்கினியான் மாறனேர் நம்பி
இழிகுலம் வாய்ந்துளான் எனினும்
தன்னுயிர்க்கினிய ஆளவந்தான்தன்
சரண் அலால் சரணிலை யென்றே
உன்னரும் புகழோன் பெரியநம்பியுமே
உவப்பொடும் அவன் பணி இயற்றி
நன்னிலை இதுவாம் என்பதை விளக்கி
நாரணற் கன்பு பூண்டனனே!

ஸ்ரீவைஷ்ணவ சமயத்தைப் பரவச்செய்யும் பொருட்டு, விசேஷ பக்தி விசுவாசத்தோடு, வாழையடி வாழைபோல, வழி வழி வந்து, வாழாட்பட்டு நின்ற குருபரம்பரையில்; சோழ

நாட்டிலே, கி.பி.பத்தாவது நூற்றாண்டில், ஸ்ரீ யாமுனாசார்யர் என்றும், ஸ்ரீ ஆளவந்தார் என்றும், பிரஸித்தமாகப் பெயர் பெற்றிருந்த சமயாசார்யர் ஒருவர் இருந்தார்.

அவர் 'கிளரொளி இளமை கெடுவதன் முன்னம்' ஒப்புயர்வற்ற பாண்டித்யம், மிகுந்த ஞானசக்தி, மனோதிடம், ஒழுக்கவன்மை, பூதகதை ஆதிய ஆத்மகுண ஸம்பன்னராய், வடமொழிக் கடலை நிலைகண்டுணர்ந்து, வேத வேதாந்த வேதாங்கங்களிலெல்லாம் மகா நிபுணராய் அக்காலத்தில் ஸ்ரீ வைஷ்ணவம், தழைத்தோங்கிப் படர்ந்து, எவ் வர்ணத்தினர்க்கும் இன்ப நறுங்கனி சிதறி, நாடெங்கும் போர்த்து நிறையும்படி ஒரு கொழுகொம்பாய் விளங்கினரென்று குருபரம்பராப்ரபாவம், ஹரிசமய தீபம் முதலிய வைஷ்ணவ சமய நூல்கள் முறையிடுகின்றன. இவர் இயற்றிய ஸித்தித்ரயம், கீதார்த்த ஸங்க்ரஹம் முதலிய நூல்கள் ஸ்ரீவிசிஷ்டாத்வைதிகளான வைஷ்ணவச் செல்வர்களால் மூலபொக்கிஷமெனப் போற்றப் படுகின்றன.

இவர் காலத்தில் அரசாண்ட சோழகுலத்தரசன், ராஷ்ட்ரகூடர்களை வென்று வீரம் கெடுத்து வெற்றிமாலை சூடி, வெங்கி, ஒரிஸ்ஸா, இலங்கைத்தீவு முதலிய இடங்களிலும் தன் கொடி பறக்கத் தமிழ் நாடெங்கும் தருமமொடு பொன் விளைய,

'வறிஞன் ஓம்பும் ஓர் செய்யேனக் காத்து'

பாரதப் பழம்பெரு நாட்டிலே தனிமுடி கவித்தாண்ட 'ஸம்ராட்' என்ற மன்னர்மன்னர்களில் ஒருவனாய், சீரும் சிறப்பும் பேரும் புகழும் வாய்ந்து பெருவாழ்வு வாழ்ந்த திருவாளன், மஹாராஜ-ராஜ சோழன் ஆவன். (கி. பி. 985—1012.)

"பல் குடை நீழலும் தங்குடைக் கீழ்க்காண்பர்
அலகுடை நீழல் அவர்" (திருக்குறள்.)

"இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர்" (சிலப்பதிகாரம்)

என்ற முன்னோர்மொழிகளின்படி, விவசாயத்தால் செல்வத்தைப் பெருக்கிய அவனது பிரபுக்கள், தண்ணளியுடைய வண்மையாளராய், தம் அரசனோடு ஒத்து உழைத்து, அவனுக்குக் கொற்றம் பெருக்கி, ஒருவரோ டொருவர் மாறுபட்டுப் பகைத்துக்கொண்டிருந்த பல வேந்தர்களுடைய ராஜ்யங்களையும் தம் அரசன் குடைநிழலிற் கண்டு மகிழ்ந்தார்கள். இத்தகைய ராஜசக்ரவர்த்தியான ராஜராஜ சோழன் தமிழ்நாடு செய்த மாதவப் பயனாய் அரசியற்று நாளிலே, நமது சரித்ரம் ஆரம்பமாகின்றது.

# I

ஒருநாள் ஸ்ரீ யாமுனாசார்யர், வைதிக ஸித்தாந்த உண்மைகளை, நாடும் நகரமும் அறியப் பரவச்செய்யும் வண்ணம், தமது சிஷ்யக் கூட்டத்தோடு யாத்திரை செய்துகொண்டிருந்தார்.

அவர் வரும் வழியில், ஒரு மனிதன் வயல் உழுதுகொண்டிருந்தான். அவன் பராந்தகம் என்னும் ஓர் குக்கிராமத்தைச் சேர்ந்தவன்; மள்ளர் அல்லது பள்ளர் வகுப்பில் பிறந்தவன்.

அப்பொழுது தனக்குப் பசி தாகம் மேலிட்டமையால், அந்த மனிதன், சேறும் நீருமாய்க் கலங்கி ஓடிய ஓர் ஓடையிலிருந்து ஒரு கையளவு நீரை வாரி, அதை எம்பெருமானுக்கு உரிமையாக்கிப் பருகினான்.

"எம்பெருமான் அடியார்தம்மைக் கண்டேனுக்கு, இதுகாணீர்! என்னெஞ்சும் கண்ணிணையும் களிக்குமாறே" என்கிறபடி எம்பெருமானிடத்து மனமும், தொழிலினிடத்துக் கையுமாக வாழ்ந்துவரும் மனிதனை, ஸ்ரீ ஆளவந்தார் கண்குளிர நோக்கி, அக் காட்சி யின்பத்தைக் கண்களால் பருகி, நெஞ்சிலே தேக்கிக்கொண்டு நின்றார்.

ஸ்ரீ ஆளவந்தார் (தம்கூட்டத்தை நோக்கி):—என் அருமைக் குழந்தைகளே! 'கருப்பைக்குள் முட்டைக்கும், கல்லினுள் தேரைக்கும் விருப்புற்று அமுது 'அளிக்கும்' மெய்யன்பனாகிய ஸர்வேச்வரன், தன் மக்களுடைய வயிற்றுப்பசியைத் தீர்த்து, உடம்பைப் போஷித்து வளர்த்தற்குரிய அன்னபானாதிகளையெல்

லாம் ஏராளமாய்ப் படைத்திருக்கிறான் அல்லவா? தன் குடும்பத்தைச்சேர்ந்த மக்கள் எல்லோரையும் க்ஷேமம் வினவி ஸதாஸர்வ காலமும் காப்பாற்றும் பாரம் ஸ்ரீமானான எம்பெருமானுக்குரிய தன்றோ? மேலும் 'கங்கையில் புனிதமாய காவிரி', தாம்ரபர்ணி என்னும் புண்யநதிகள், அலைகொழிக்கச் செழிப்புற்றோங்கும் செந்தமிழ்நாடு, எங்கும் பைங்கிறப்பழனம் பரவிய தெய்வவளநாடாய், கல்விச்செல்வத்திலும் பொருட்செல்வத்திலும் அருட்செல்வத்திலும், உலகத்திற்கே பிச்சையருளிய பாரதமாதாவின் திருமங்கலநாணாய் விளங்குகின்றது. இத்தகைய சிறப்பு வாய்ந்த தமிழ்த்திருநாட்டிலும், 'சோழவளநாடு சோறுடைத்து' என்று புகழ்ந்தோதப்படுகின்றது. பொருட்செல்வமும், தமிழ்ச்செல்வமும் தம்முள் மாறுபடாது தழுவித் தோழமை பூண்டு ஒருங்கே வளரும் இந்த நன்னாட்டிலே, நமது ராஜராஜ சோழன் உத்தமாங்கமாகிய தலையில் மணிமுடியும், உயிர் நிலையாகிய நெஞ்சிலே அருள் முடியும் தரித்துச் செங்கோல் செலுத்தி வரும் இக்காலத்திலே, இதோ கழனியருகே,

"உழவினார் கைம்மடங்கின் இல்லை, விழைவதூஉம்
விட்டேம் என்பார்க்கு நிலை"

(அதாவது உழவர்கை, மடங்குமாயின் முற்றத்துறந்த முனிபுங்கவர்க்கும் நிலையில்லை) யாதலின் தாம், எரும் கையுமாய் நிற்கும் இவர், சேறும் நீரும் உட்கொள்வதேன்? இதனை அறிந்து வாருங்கள்.

ஆசார்பரது ஆணையைச் சிரமேற்கொண்டு, ஸ்ரீ ஆளவந்தாரின் மாணவர்களிற் சிலர், நெற்றிவியர்வை நிலத்தில்விழ, வயல்நடுவே உழைத்துக்கொண்டிருக்கும் அவரிடம் சென்று,

"அன்பரே! உமது செய்கையின் கருத்தென்ன? நமது பரத கண்டத்திலுள்ள ஆண், பெண், குழந்தை அனைவரையும் போதுமானபடி போஷித்தபின் பிறநாட்டார் பசிப்பிணியையும், பஞ்சத்தையும் நிவர்த்திக்கும் வண்ணம், ஏற்றுமதி செய்யப் படும், உணவுப் பொருள்கள் மலிந்த இச்செல்வத் தமிழ்த்திரு நாட்டிலே, எல்லார்க்கும் உண்ண உணவிருக்க, அருமையான 'மெய்வருத்திக் கைசெய்து' அம்மெய்வருத்தம் பாராது, குடியும் கோனும் ஒருங்கே உயர்தற்கு ஏதுவாகிய உழுதல் தொழிலே கண்ணும் உழைத்துவரும் உமக்கு மாத்திரம் குடிக்கக் கூழ் இல்லையா"? என்று கேட்டார்கள்.

கழனி திருத்துவோன்:—(அவர்களை நோக்கி) ஸ்வாமிகளே! அடியேன் இம்மண்ணிற்கு அம்மண் ஏற்றம் அறிகிலேன்.

இம் மறுமொழியைச் சிஷர்கள் உடனே தாயினும் அன்பரான ஸ்ரீ ஆளவந்தாரிடம் தெரிவித்தார்கள்.

"எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."

ஆகலின் ஸாரக்ராஹியான யாமுனரும் அப்பொன்போன்ற மொழியின் மெய்ப்பொருள் கண்டு மகிழ்ந்தார்.

ஸ்ரீ ஆளவந்தார்— என் இனியமாணவர்களே! பாருங்கள்! 'பழிதொழிலும் இழிகுலமும் படைத்தார்' என்று பாமரஜனங்களால் விலக்கப்பெற்றிருக்கும் இவரை. வெண்ணெயை விரும்பியுண்டதுபோல மண்ணையும்மகிழ்ந்துண்ட ஸ்ரீமானான எம்பெருமாமாயனது மெய்யடியார்களில் ஒருவரன்றோ இவர்? உண்மையாகவே ஓர் பெரியவர்! ராஜகுலமாகிய தொண்டக்குலத்தைச் சேர்ந்தவர்! மெய்ஞானியாகிய இவர்,

"மெய்வருத்தம் பாரார், பசிநோக்கார், கண் துஞ்சார்,
எவ்வெவர்தீமையும் மேற்கொள்ளார்,- செவ்வி
அருமையும்பாரார், அவமதிப்புங்கொள்ளார்,
கருமமே கண்ணாயினர்".

"நித்யமாய்ச் செய்யத்தகுந்த கர்மத்தை நீசெய். அகர்மத்தைப் பார்க்கிலும் கர்மமே சிரேஷ்டமானது. கர்மம் செய்யாதிருக்கின்ற உனது சரீரப்பாதுகாப்பும் பயன்தராது." (ஸ்ரீகீதை. அத். 3. சு. 8.)

"ஜனகன் முதலானவர்கள் கர்மத்தாலே ஸித்தி அடைந்தார்கள். மக்களின்பயனைக் கருதியாகிலும் கர்மம் செய்தற்கு யோக்யனாய் இருக்கிறாய்." (ஸ்ரீகீதை. அத். 3. சு. 20.)

என்று இவ்வாறு ஈச்வரன் மீது பாரத்தைச் சுமத்தி— "நான்பரமாத்மாவின் ஊழியக்காரனாய் ஸகல கர்மத்தையும் செய்து, பரமாத்மாவுக்கு ஒப்புவிக்கவேண்டியவன்." (ஸ்ரீகீதை. அத். 3. சு. 30.) என்றதீர்மானத்தோடு ஈச்வரவழிபாடாக ஒவ்

வொருவனும் தத்தம் கடமையைச் செய்வதிலே கண்ணும் கருத்துமாய் இருக்க வேண்டும் என்று ராஜகுமாரனான அர்ஜுனனுக்கு ஸாரதியாய் நின்று தொண்டு செய்து மன்ருடி வற்புறுத்தி உபதேசித்த ஸ்ரீகீதாசார்யனது கொள்கையினையே 'பஞ்சமன்' என்று சொல்லப்படும் இவர், அந்தராத்மாவாகிய பரமாத்மாவின் பரம க்ருபையால் உணர்ந்து ஒழுகுகிருர்.

"வம்மின்புலவீர்! நும்மெய்வருத்திக் கைசெய்து உய்மினே!" என்ற சடகோபர் அருள் வாக்கே, இவரது தூயவாழ்க்கையின்உயிரொலியாய் இசைந்திருக்கின்றது. ஸ்வகர்மமான கடமையினிடத்துக்கையும், எம்பெருமான் இணையடிக்கே இதயமும் வைத்து,

"அடியேன், நான்
உண்ணு நாள் பசியாவது ஒன்றில்லை,
ஓவாதே நமோநாரணு என்று
எண்ணு நாளும் இருக்கு எசுச்சாம
வேத நாண்மலர் கொண்டு உனபாதம்
நண்ணுநாள் அவை தத்துறுமாகில்
அன்றெனக்கு அவை பட்டினி நாளே."

என்று அருளிச்செய்த பெரியார் திருவடிச்சுவடுகளைப் பின்பற்றி, "உண்ணும்சோறு, பருகு நீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான்!" என்று இறுமாந்திருக்கும் இவர் இரண்டாம் சடகோபரோ? கற்ருேர்க்கு வரம்பாகும்அறிவாற்றலால்

மெய்யடியார்களிற் சிறந்த ஸ்ரீசடகோபரை ஒப்ப ஓதாதுணர்ந்த இவ்வுயர் ஞானிக்கு இன்று முதல் மாறன்–நேர்–நம்பி என்றதிரு நாமம் வழங்குவதாக.

என்றுகூறி, அவரைத்தம்முடன் வரும்படி அழைத்தார்.

மாறனேர்நம்பி— ஸ்வாமி! அடியேன் சண்டாளன். கிட்டும் யோக்யதை இல்லையே!

ஸ்ரீ ஆளவந்தார்—

"குலந்தாங்கு சாதிகள் நாலினுங்கீழ் இழிந்து எத்தனை
நலந்தான் இலாத சண்டாளர் சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணற்கு
[ஆள் என்று உள்
கலந்தார் அடியார்தம் அடியார், எம்அடிகளே."

என்று அடியவர் திருக்கூட்டத்தலைவரான ஆழ்வார் அருளிச்செய்கிறார். ஆதலால் பிரமஞானிகளுக்கு வர்ணபேதம் இல்லை. தடையின்றிவரலாம்.

(கோஷ்டியைநோக்கி)"எம்பெருமான் உம்பராளும் பேராளன்
பேரோதும் பெரியோரை ஒருகாலும்பிரிகிலேனே!"

II

பிறகு ஸ்ரீயாமுனாசார்யர், "இழிகுலத்தவர்களேனும் எம் அடியார்கள் ஆகில் தொழுமின் நீர் கொடுமின்" என்றபாசுரக்கருத்தின்படி இவர்க்கு இடையீடின்றி ப்ரத்யக்ஷசேவை ஸாதித்து

பகவத்விஷ்ய உண்மைகளை யெல்லாம் ஒளியாது வெளியிட்டுவருவர். ஸாதாரண காலக்ஷேபகாலங்களிலோ, மாறனேர் நம்பி, ஸ்ரீரங்கம், வட திருக்காவேரி, ஸ்ரீ ஆளவந்தார் படித்துறையின்கிழ்ண்டை, கூடத்திற்கு வெளியே யிருந்து, ஸ்ரீயாமுனர் செய்துவரும் சிந்தைக்கும் செவிக்கும் இனிய காலக்ஷேபங்களைச் செவிவாயாகப்பருகி வந்தார்.

இங்ஙனமிருக்க, நாளுக்குநாள் பெருகிவந்த அன்பர்குழாம், ஒருங்குகூடுவதற்குக் காலக்ஷேபகூடத்தில் போதுமான இடமில்லை. அப்பொழுது அக்கூடத்தைச் சார்ந்துள்ள தமது நிலத்தையும் கூட்டிக்கொள்ளலாம் என்று சொல்லி, ஸ்ரீயாமுனருக்குத் தம்மனையை விட்டு விட்டு ஓர் அம்மையார் பரமபதம் அடைந்தார்.

அப்பால் ஸ்ரீயாமுனர், அவ் அம்மையாரது நிலத்தையும் கூட்டிக் காலக்ஷேபகூடத்தைப் பெரிதாக்கும்படி நியமித்தார். சிஷர்கள் அவ்வண்ணமே செய்தார்கள். யாவர்க்கும் மனோஹரமான உபந்யாஸம் தொடங்க ஓர் நல்ல நாளை எதிர்பார்த்திருந்தார்கள்.

மாறனேர்நம்பி (சபையைப்பார்த்து):—பெரியவர்களே! அடியேன் இக்காலக்ஷேபகூடத்துள், சுத்தியான பின் நுழைவதற்கு அருகனுபிராதபடியால், ஸ்தல சுத்தியாவதன் முன்பே பார்த்துச் சேவித்து உய்யும்படி கிருபை செய்தருள வேண்டும்.

உடனே ஒருவர், இவரைக் கூடத்துக்குள் அழைத்துச் சென்றார். நம்பியும் கண்டு களித்து நிலத்தில் தம் உடல்பொருந்த விழுந்தெழுவதும் தொழுவதுமாய், ஆநந்தக்கண்ணீர் பனிப்ப உள்ளங் குளிர்ந்து உடம்பு பூரித்து வெளியேறினர்.

ஸ்ரீயாமுனர் (இதனைக் கேள்வியுற்று ஸபையை நோக்கி).— அன்பர்களே! ஸ்ரீவைஷ்ணவச் செல்வர்களே!

"எம்பெருமான் தாள் தொழுவார் எப்பொழுதும்
என்மனத்தே இருக்கின்றாரே!"

"எம்பெருமான் தாளை நாளும் சிந்திப்பார்க்கு என் உள்ளம் தேனூறி எப்பொழுதும் தித்திக்குமே!"

என்று இவ்வாறு ஆழ்வாரே அறிவித்தருளும் அடியார்களுடைய ப்ரபாவத்தை நினைக்குந்தோறும், நினைக்குந்தோறும், கருங்கல் மனமும் நெகிழ்ந்து கரைந்துருகும். அடியார்களைக் காணுந்தோறும் அடியார்களுடைய கல்யாணகுணங்களைப் பேசுந்தோறும், உவட்டாது தித்திக்கும் ஆநந்தம் ஊறி ஊறி அகமும் புறமும் துளும்பி வழிந்து பெருகி வெள்ளமிடும். "ஞானத்தின் ஒளியுருவை—நினைவார் என்நாயகரே." "கொண்டாடும் நெஞ்சுடையார் அவர் எங்கள் குலதெய்வமே." பாகவதரே நமது நாயகர். பாகவதரே நமது குலதெய்வம். பாகவதரே பெரியோர். பாகவதரே புண்ணியர். எப்போது ஒரு பரமபாகவதரது திருவடி தீண்டப்பெற்றதோ அப்போதே நமது காலக்ஷேப கூடம் தூய்

மையாய் விட்டதல்லவா? ஆதலால், இன்றே நல்லநாள். இப்போதே நல்ல முகூர்த்தம். இதுவே ஸ்தல சுத்தி. இன்னும் ஒரு சுபதினத்தை நாம் ஏன் எதிர்பார்க்கவேண்டும்? இதுவே தருணம். இப்போதே காலக்ஷேபத்தை ஆரம்பஞ் செய்வோம்.

அனைவரும் கூடத்திற் சென்று வீற்றிருந்து காலக்ஷேபம் கேட்கலாயினர்.

## III

நாளடைவில் மாறனேர் நம்பியும் ஸ்ரீயாமுனாசார்யருடைய அளவிறந்த மெய் அன்பிற்கும் மஹா விசுவாசத்திற்கும் உரிய அந்தரங்க சிஷ்யரானார். ஒருநாள் ஸ்ரீயாமுனர், தமது சிஷ்ய வர்க்கங்களைப் பார்த்து, "இளையாழ்வாரை (இராமாநுஜரை) அழைத்துவரப்போன பெரிய நம்பி வருகிற சமயமாயிருக்கிறது. நாமும் இளையாழ்வாரும் ஒன்றாகக் கலந்தால், இருள்தருமா ஞாலமாகிய இம்மண்ணுலகத்திற்கும் களிவொளி வானகமாகிய பரமபதத்திற்கும் ஞானத்தால் படிகட்டி விடுவோம் என்று கருதி, நம்பெருமாள் நம்மைப் பரமபதம் போகும்படி நியமித்தருளினார் போலும்! நீங்கள் இதைக்குறித்து வருந்தவேண்டாம்" என்று சொல்லி,

"இது நிற்க. நான் இனி அனுபவிக்கவேண்டிய ராஜரண உபத்ரவத்தை உங்களில் யார் அங்கீகரித்து ஏற்றுக்கொள்ள விரும்புகிறீர்கள்?"
என்று கேட்டருளினார்.

ஒருவரும் ஒன்றும் பேசவில்லை. பேசத்துணியவும் இல்லை. ஸபையெங்கும் நிச்சப்தமாயிருந்தது. திடீரென்று அந்த நிச்சப்தத்தைக் கிழித்துக்கொண்டு, 'நாயேனுக்குரியது!' 'நாயேனுக்குரியது!' என்ற ஓர் குரல், இருமுறை 'கணீர்' என்று ஒலித்தெழுந்தது. அப்பொழுது மாறனேர் நம்பி, எழுந்து அடிதொழுது நின்றார். ஸ்ரீயாமுனர், அகமகிழ்ந்து, முகமலர்ந்து, அன்பும் அருளும் கலந்த தமது பார்வையை அவர்மீது செலுத்தி, 'நம்பி! அருகே வாரும்' என்று கட்டளையிட்டருளினார்.

மாறனேர்நம்பி—(தூரமாய் நின்று) அடியேன் சண்டாளன்.

ஸ்ரீ ஆளவந்தார்—அந்தக்குலம் உமக்கில்லை, வாரும். (அருகே வரவழைத்து) அன்பரே உமக்கு வேண்டுவதென்ன?

மாறனேர்நம்பி—நாயினேனுக்குத் தேவர் இது பொழுது ஸபையில் அருள்புரிந்த ப்ரஸாதம் வேண்டும்.

ஸ்ரீ ஆளவந்தார்—இது பொல்லாத பெருநோயாயிற்றே! இத்துன்பத்தை நீர் பொறுக்க வல்லீரோ?

மாறனேர்நம்பி—(அடிதொழுது) அதுவே அடியேனுக்கு மேலான ப்ரஸாதம்!

ஸ்ரீ ஆளவந்தார்—(வியப்படைந்து, சபையைப்பார்த்து) கீழ்க்குலம் என்று உங்களால் ஒதுக்கப்பட்டிருக்கும் 'தாழ்ந்த' வகுப்பினரான மாறனேர்நம்பியின் மனோதிடமும் ஒழுக்கவன்மையும் உயர் குலத்துதித்த உங்களில் எவர்க்கும் இல்லாமற் போயிற்றே!

என்று இடித்துரைத்து வழக்கம்போல. காலக்ஷேபம் நடத்தி வந்தார்.

மாறனேர்நம்பிக்கும் ராஜரணம் கண்டது. அவரும் அவ்வுபத்ரவத்தை, காலஞ்சென்ற தம்முடைய ஆசார்யன் அருளிய மஹாப்ரஸாதம் என்று பெரிதும் மனம் உவந்து ஏற்றுக்கொண்டார். ஆளவந்தார் காலஞ்சென்றபின், அந்த அநுபவமே ஆசார்ய கைங்கர்யம் என்றுகருதினர். அப்பொல்லாப் புழுமலி நோயினும் தமது மனோதைரியத்தைச் சிறிதும் நழுவவிடாதிருந்தார். அப்பொழுது அவருக்குச் சமையல்செய்ய ஒருவருமில்லை. நோயின் துன்பத்தால், தாமே சமையல்செய்து கொள்ளவும் வலிமையற்றவராயினர்.

இவ்வாறு மாறனேர்நம்பி மஹாரோகமாகிய ராஜரணத்தில், ஈடுபட்டிருப்பதையும், அத்தகைய பொறுத்தற்கு அரிய துன்பத்திலும் தமது மனோதிடத்தைக் கைவிடாமலிருப்பதையும், ஸ்ரீ யாமுனாசார்யருடைய பிரதான சிஷ்யருள் ஒருவரும் ஸ்ரீ விசிஷ்டாத்வைத ஸ்தாபனாசார்யரான இராமாநுஜருடைய ஆசார்யருமான பெரியநம்பிகள் பார்த்துப் பார்த்துப் பேராச்சரியம் அடைந்து, "ஆ! என்ன மஹாவிசுவாசம்! எத்தகைய பக்தி! இவரன்றோ, உண்மையான வைஷ்ணவர்? இவருடைய தன்றோ ஆசார்யநிஷ்டை!" என்று நினைத்து நினைத்து நெஞ்சம் நெகிழ்ந்துருகி மெய் அன்பு, அகமும் புறமும் நிறைந்து ததும்பிப்பொங்க, மாறனேர் நம்பிபால், அடியற்ற மரம்போல் வீழ்ந்து வணங்கினர்.

மாறனேர் நம்பி:—ஐயையோ! அடியேன் பஞ்சமனுக்கு தே! பிராமணேத்தமரான தேவரீர் இப்படிச்செய்யலாமோ? அடியேன் குற்றத்திற்கு ஆளாவேன்.

பெரிய நம்பிகளும் 'அப்படியல்ல' வென்று, அன்றுமுதல் உணவு கொண்டுவந்து மாறனேர் நம்பியை அமுது செய்வித்து வந்தார்.

இப்படி நடந்துவருகையில். ஒருநாள் இரவு, பெரியநம்பி, மாறனேர் நம்பிக்கு உணவு கொண்டுபோய்க் கொண்டிருந்தார். அப்போது தமது ஆசார்யருக்கு, 'உணர்வும், கண்ணும், மாற்றமும், வலியும்,தோளு'மாய் விளங்கிய ஸ்ரீராமாநுஜர், 'நமது ஆசார்யரான நம்பிகளுக்கு என்ன தீங்கு வரப்போகிறதோ!' என்று யோசித்து, அவருக்குத் தெரியாமலே, திருமேனிக்காவலாய்த் தொடர்ந்தார்.

பெரிய நம்பியும் மாறனேர் நம்பி, எழுந்தருளியிருந்த நந்தவனத்தை அடைந்தார். பிறகு, மாறனேர் நம்பியை அமுது செய்விக்கப் பொய்கையிலிருந்து தீர்த்தம் எடுத்து வந்தார். நீர் ஆட்டுவித்துத் திருவடி விளக்கித் திருமண்காப்புச் சாத்தின பிறகு, பெரிய நம்பியும் அவரை நோக்கி, 'அமுது செய்யும்' என்று இலையில் 'தளிகை' (அன்னம்) பரிமாறினர்.

அத்தருணத்தில், நந்தவனத்திலே, மாறனேர் நம்பியுடைய குடிலின் பின்புறமாய் மறைந்திருந்து, எல்லாவற்றையும் உற்று

நோக்கிக் கொண்டிருந்த இராமாநுஜர், "ஆசார்யரான பெரிய நம்பி, ஜாதிகர்வம்—வித்யாகர்வம்—ஐசுவரியகர்வம் என்னும் முக்குறும்பையும் முற்றத்துறந்து, மாறனேர் நம்பி 'தாழ்ந்த வர்ணத்தினர்' என்ற எண்ணமும் இன்றி, புழுக்கள் நிறைந்த ராஜரண உபத்ரவம் கண்டிருக்கும் இவருக்கு மெய்யன்போடு பணிபல இயற்றி, வருகின்றனரே! இது என்ன ஆச்சரியம்? இதுவன்றோ, மெய்த்தொண்டு! இதுவன்றோ, ஸத்யமான பாகவதாபிமானம்!" என்று எண்ணி எண்ணிப் பெரியநம்பிகளின் பரம கைங்கர்யத் திறமையை வியந்து, செயல் மறந்திருந்தார்.

அதே சமயத்தில், மாறனேர் நம்பியின் கோரமான நிலைமையைக்கண்டு அவர் நெஞ்சம் புண்ணாயிற்று. "ஆ! ஆ! இம்மஹா ரோகத்தை மாற்ற மருந்தில்லையோ? இக்கொடிய துன்பத்தினின்றும்,உய்ய வழியில்லையோ?" என்று கலங்கித் தத்தளித்த அவரது உள்ளத்தில் "எம்பெரும! இந்தப்புண்ய சீலராகிய மாறனேர் நம்பிக்கு இக்கொடிய ராஜரண உபத்ரவங் கண்டு கிருமிகள் காணலாமோ?" என்ற ப்ரார்த்தனை வடிவமானஓர் ஆசங்கை எழுந்தது.

'தன்னுயிர்க்கிரங்காது', பிறர்துன்பங்கண்டு 'ஐயோ' என்று இரங்கி, அகங்கரைந்து, பிறர்பொருட்டுத் தாம் மன்றாடும் மெய் அன்பரது இதயப்பூங்கோயிலில், ஞான வொளியுருவாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானது இன்னருளால் அந்த க்ஷணத்திலேயே, மாறனேர் நம்பியின் ராஜரணம் மறைந்து, அவர் தேகம் நல்லதேகமாய் விளங்கியது.

இப்புதுமையைக் கண்ட மாறனேர் நம்பி பின்வருமாறு தமக்குள் தாமே ஆலோசித்தார். "பெரிய நம்பிகள் தமக்குக் கைங்கர்யம் செய்வதுபோற்காட்டி, தமது நல்லாசிரியராயிருந்த ஆளவந்தார் தமக்கே அருளிய மஹாப்ரஸாதம் இது என்று நம்பி, தாம் பரம சந்தோஷமாய் அநுபவித்து வந்த ராஜரணத்தைக் குறித்து, மனம் பொறுக்காமல் 'சண்டாளனாகிய இவனுக்கும், ஆசார்ய விஷயமாக, இத்தகைய பேரன்பும் விசுவாசமும் வாய்க்கலாமோ?' என்று கருதிக் கருத்தழிந்து, எப்படியோ—எவ்வித உபாயத்தாலோ—ஆசிரியாது 'ப்ரஸாதத்தை' விலக்கிவிட்டிருக்கலாம்."

இவ்வாறு சந்தேகித்துத் தமது சங்கையைப் பெரிய நம்பிகளுக்கு வெளியிட்டு, 'அடியேன் என்ன அபராதம், தேவருக்குச் செய்தேனே?' என்று தம்மைத்தாமே நொந்துகொண்டார். உடனே, ஓர் கல்லை எடுத்துத் தமது தலையில் மோதிக்கொள்ள எத்தனித்தார்.

அங்கு மறைந்திருந்த இராமாநுஜர் மாறனேர்நம்பியின் வைராக்கிய திடத்தைக் கண்டு, அதிசயித்து 'இப்பழிபாவத்திற்கு நாம் ஆளாகலாமோ?' என்று அஞ்சி 'எப்போதும் போல மாறனேர்நம்பியின் திருவுள்ளத்திற்கு உகந்த ஆசார்ய கைங்கர்யம் வாய்க்கவேண்டும்' என்று மீண்டும் எம்பெருமானை நோக்கிப் பிரார்த்தனை செய்தார்.

மாறனேர் நம்பி—(பெரியநம்பியைநோக்கி) நம்பிகளே! அடியேன் உமது விஷயத்தில் வீணாக ஐயப்பட்டேன். நாயேனுக்குரிய

மஹாப்ரஸாதம் எப்போதும் போலவே வந்துவிட்டது. சிறியேனது பெரும் பிழையைப் பொறுத்தருளவேண்டும்.

பெரியநம்பி, இந்நிகழ்ச்சியைக் கண்டு, பெருவியப்படைந்தார். 'இதற்குக் காரணம் யாதாயிருத்தல் கூடும்'? என்று சிந்தித்துக்கொண்டிருந்தார். உடனே, மாறனேர் நம்பியும் பெரியநம்பிகளிடத்து மேன்மேலும் பொங்கிக் கரைபுரண்டு வெள்ளமிட்டெழுந்த பெருங்காதலோடு, கண் இழந்தவன் கண் பெற்றதுபோலக் கருதி; ஆநந்த பரவசரானர்; எழுந்து நின்று ஆநந்த நிர்த்தம் செய்தார்.

இவரது ஆநந்தத்தைக் கண்டு காமுற்ற பெரிய நம்பிகளது உள்ளமும், பூர்ண சந்த்ரோதயம் கண்ட இன்பப் பெருங்கடலெனப் பூரித்துப் பொங்கி யெழுந்து ஆநந்த வெள்ளமிட்டது.

இவ்வண்ணம், பேர் இன்பக்கடல் ஆடிநின்ற நம்பிகள் இருவரையும், இராமாநுஜர், கண்குளிர தரிசித்து, 'நோக்கிய கண் இமையால் நோக்கி நோக்கி' அக்காட்சியின் கரைகாணுதவராய், தாமும் பரமாநந்த—பக்திப் பெருங்காதலில் ஆழ்ந்திருந்தார்.

பின்பு, பெரிய நம்பி, மாறனேர் நம்பியின் பர்ணசாலையை விட்டு, வெளியே வந்து பார்த்தார்.

பூர்ண சந்திரிகையோடு, பெருங்களிப்புற்று, இயற்கையரசியார், என்றும் அழியாததாய்—ஆயினும், என்றும் புதியதாய், இனியதாய்—ஒளிரும் தமது ஒப்பற்ற திருவிளையாடல் புரிந்து கொண்டிருக்கும் நேரம்!

ஆநந்தமயமான அவ்வேளையிலே—ஆ! ஆ! என்ன அற்புதம்! என்ன புதுமை!—தாள்தோயும் தடங்கையினராய், கரையற்ற கருணைமாகடலாய், ஸமஸ்த கல்யாண குண கண நிதியாய், பரம-யௌவன-ஸௌந்தர்யச் செல்வத்தோடு, 'அறங்கிடந்த சிந்தையராய் ஆசையெலாந்துறந்த' வீர-லக்ஷண ஸம்பந்நராய், மஹா கம்பீரமான தோற்றமும், கிளரொளி வலிமையும், ப்ரேமாம்ருதப் பெருங்கடல்களான திருக்கண்களும், உடைய மஹாநுபாவராய் விளங்கிய யதிராஜர், தமது ஆச்ரமத்திற்குரிய முக்கோலும் கையுமாய், செங்காவிப் பட்டாடை திகழும் பொன்மேனி,பூர்ண சந்திரப்ரகாசமாகிய அமுதவெள்ளத்தில் தோய்ந்து ஒளிசெய்ய, ஓடுவதைப் பெரிய நம்பிகள் கண்ணுற்றார். கண்கள் புரிந்த தவம் இதுவேயெனக் கண்டு களித்து,இவர் ஸ்ரீபகவத்ராமாநுஜரே! எனத்தெளிந்து தேறி, 'இவர்க்காகக் கருணைமுகிலான பகவான் இரங்கி, இன்று நமக்கு அகமெலாம் நெகிழ்ந்துருக, ஆநந்தத்தேன் பொழிந்தருளினன் போலும்!' என்று மாறனேர் நம்பியிடம் விண்ணப்பம் செய்தார்.

மாறனேர் நம்பியும்,"அடியேனுக்கு, எண்ணுறுந் துயர் விளையும் புலனுன இவ்வாழ்க்கையில், ஆசார்ய-மஹாப்ரஸாதமாகிய ராஜரண உபத்ரவமே ஆநந்தம்!" என்றார்.

## IV

மாறனேர் நம்பிக்கு இறுதிநாள் கிட்டியது. அவர் தமது ஆசிரியரது அருட் பெருக்கை நினைந்து நினைந்து, அகங்கரைந்து,

அன்பு கனிந்திடுதற்கு அறிகுறியாய்த் தாம்வைத்திருந்த ஓர் விக்ரஹத்தை நோக்கினர். அங்குள்ளவர்களையும் நோக்கினர். 'அடியேன் இதுவரையில் செய்துள்ள குற்றங்களை மன்னித்தருளவேண்டு' மென்று பிரார்த்தித்தார்.

பெரியநம்பியும் 'எம்பெருமானுக்குக் குறைவு உண்டாகில் அன்றோ, தேவருக்கும் ஏற்படும்?' என்று முடிபிடித்து எடுத்தார்.

அப்பால், மாறனேர் நம்பி, தமது ஆசார்யராகிய ஆளவந்தாருடைய ஞானத்திருவுருவைக் கண்களிலும் மனத்திலும் தேக்கிக்கொண்டார். அப்போது அவரது ஆத்மா, பொல்லாப் புழுக்கள் நிறைந்த ராஜரணத்தால் பிடிக்கப்பட்டு மிகவும் தளர்ந்திருந்த உடம்பிலிருந்து விடுதலை யடைந்து, துயரமெல்லாம் தீர்ந்து அந்தமில்-இன்பத்து-அழிவில்-மேல்வீடு அடைந்தது.

பெரிய நம்பிகளும், மாறனேர் நம்பிகளுக்கு, ஜிதையை அடுக்கி, சாஸ்த்ர ப்ரகாரம், பிராமணோத்தமர்களான பெரியோர்களுக்குரிய ப்ரம்மமேத-ஸம்ஸ்காரம் செய்தார். சஞ்சயனமான வுடனே, புஷ்கரிணியில் நீராடாமலே, பெரியநம்பிகள், திருமாளிகைக்குள் பிரவேசித்தார்.

'பஞ்சமரான மாறனேர் நம்பிக்கு அந்தணரான பெரிய நம்பிகள், சரமகைங்கர்யமும் செய்துவந்தார்,' என்று கேள்வியுற்ற பிராமணர் அனைவரும் நம்பிகளை வெறுத்துப் பேசினார்கள். இச்செய்தியை அறிந்த இராமாநுஜர், பெரியநம்பி திருமாளிகை சென்று, அவரை ஏகாந்த சமயத்தில் வணங்கி,

"ஸ்வாமி! அடியேன் செய்யும் விண்ணப்பங்கேட்டு அருள் புரிதல் வேண்டும். ஒருவ 'பாலே, கட்டிவைக்கப்பட்டிருக்கும் வரம்பை, தேவரீர், மற் ஒருவழியாலே அழித்துவிடுகிறீர்களே! மாறனேர் நம்பிவிஷயத்தில், அடியேனளவான ஏவலாளர்களை நியமித்துப் பணிகொள்ளலாகாதா? தேவரீரே ப்ரம்மமேத-ஸம்ஸ்காரம் செய்யத்திருவுள்ளம் பற்றியது, உலகத்தார் உள்ளத்தைப் புண்படுத்துகிறதே!" என்றார்.

பெரியநம்பி— (கல்லென நகைத்து) ஜீயரே! மாறனேர் நம்பியை என்ன நினைத்தீர் உம்மனத்தால்? ஸ்ரீ ஆளவந்தாரது அபிமானத்திற்கு விசேஷஉரிமை வாய்ந்த 'அரும்பெறற்புதல்வ' ரானஉத்தமமாணுக்கருள் ஒருவரன்றோ இவர்! ஆகையால், நாம் ஸந்த்யாவந்தநம்போன்ற நித்யகர்மாநுஷ்டானத்திற்கு ப்பிரதிநிதியாக ஆளிட்டாலும் இடுவோம். இத்தகைய விஷயத்தில் மாத்திரம், வேறொருவரையும் ஏவமாட்டோம். வரம்பை அழித்துவிட்டதாகச் சொல்லவந்தீரே! இவ்விஷயங்களில், உயர்ந்தோர் அநுஷ்டானத்தைக் குறித்து, ஆராச்சிசெய்யவேண்டாமா? நமது குலதனமாகிய ஸப்ரதாயத்தின் ஸாரத்தைப்பற்றி யோசித்தீரா?

"பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண,
அணியரங்கந் தந்தானை அறியாதார் அறியாதார்".

என்ற வண்ணம் சூர்ய வம்சத்திலே பிரஸித்தி பெற்ற பெரியோனுன இக்ஷ்வாகு மரபில் அவதரித்த சக்ரவர்த்தி திருமகனார் (ஸ்ரீராமன்), கழுகாய்ப்பிறந்து தசரத சக்ரவர்த்திக்கு ஓர் ஆவி

நேர்-அன்பனுயிருந்த ஜடாயுவுக்குப் புதல்வன் செய்யும் கடனைச் செய்யவில்லையா? நான் பெருமாளைக்காட்டிலும் பெரியவனுக மாட்டேனே! ஸ்ரீஆளவந்தாரது அபிமானச் செல்வத்திற்கு விசேஷ உரிமை பூண்டிருந்த மாறனேர் நம்பி, சக்ரவர்த்தியின் அபிமானத்திற்குரிமை பெற்றிருந்த (கழுகான) ஜடாயுவைக்காட்டிலும் சிறியவரும் ஆகாரே! சந்திரவம்சமாகிய அமுத வெண் கடல் மிசைவந்து, 'செழுஞ்சுடர்ப் பனிக் கலையெலாம் நிரம்பிய' முழுமதியின் தோற்றம் போலத்தோன்றி, தர்மத்தையே நாடிய ஆத்மகுணத்தாலும், அதர்மத்தை அறவொழித்த துணிவாலும், திரிலோக நாயகனுய் ஒளிர்ந்த தர்மபுத்ரன், கண்ணனது மெய் யன்பனுயிருந்த (தாஸி புத்ரனை) விதுரனுக்கு புத்ரக்ருத்யம் (இறந்துபோன தகப்பனுக்குப் புதல்வன் செய்யும் கடன்) செய்தார் அல்லவா? நான் தர்மராஜாவைக் காட்டிலும் பெரியவனு? மாறனேர் நம்பி, விதுரரைக்காட்டிலும் சிறியரா? இவை, முன்னோர்களான பெரியோர் ஆசாரங்கள். மேலும், முன்னோர் நூல்களில் கூறப்படும் சாமான்ய தர்மங்களைக் காட்டிலும், அவற்றின் முடிபு ஒத்துப் பின்னோர்களான ஆழ்வார் ஆதியர் வேண்டும் விகற்பத்தோடு, பாகவதர்களுக்கு விசேஷ தர்மங்களையும் வகுத்திருக்கிருர்கள் அல்லவா? சாமான்ய-விசேஷ தர்மங்களை யெல்லாம், ஐயந்திரிபறக் கற்றுக்கேட்டு உணர்ந்து, ஆழ்ந்து-அகன்று-உயர்ந்த நுண்ணிய மெய்யறிவோடும், வரம்பின்றி விரிந்து சிறந்த மெய் அன்போடும், ஸத்யத்தையே பற்றுக்கோடாகக் கொண்டு ஒழுகுவது ஸ்ரீவைஷ்ணவச் செல்வர் கடமையாம்.

இனி, நீர் என்ன சொல்லப்போகிறீர்?

'குழலை வென்ற குளிர்வாயின' ரானபெரிய நம்பியின் இதய ப்ரதேசத்தினின்றும் கடல்மடை திறந்ததென ப்ரவஹித்து வந்த அமுதகீத அருள் வாக்கை, தமது சிந்தையின் தாபமும் தாகமுங் கெட, இராமாநுஜர் இருசெவிகளாலும் பருகி இன்பம் அடைந்தார்.

பிறகு, 'மெய்ம்மதிக்கடலா'ன அவர், ஸ்தலவாஸிகளான பிராமணர்களுக்கெல்லாம் ஆசார்யஸ்வாமிகளான பெரிய நம்பிகளின் மாசற்ற திருவுள்ளத்தில் பதிந்து கிடந்த உயர்தர எண்ணங்களையும் லக்ஷ்யங்களையும் வெளியிட்டு, அவரவர் கொண்டிருந்த மதி மயக்கங்களையெல்லாம் தம்மால் இயன்றவரையில் நீக்கமுயன்றார்.

V

பின்பு, பெரியநம்பி, காலஞ்சென்ற பரமபாகவதசிகாமணியான மாறனேர்நம்பிக்குப் பத்துநாள்வரையிலும் செய்யவேண்டிய கிரியைகளையெல்லாம், வெகுவிமர்சையாகச் செய்தார்; அத்யந்த ச்ரத்தையோடு ச்ராத்தமும் நடத்திபருளினார்.

'ஊர்வாயைமூட உலைமூடியுண்டா, இந்த ஸமாசாரம், காட்டுத்தீபோல, ஊரெங்கும் பரவியது. ஸ்ரீ ரங்கத்திலுள்ள பிராமணர்களும் பிறரும், கோபாவேசம் மேலிட்டவர்களாய், 'சினமான தீ அறிவைப்புகைத்ததால்,' கும்பல்கூடி, நம்பிகளின் திருமாளிகையை மூடி, தெருவாசலில் முள்ளைப்போட்டார்கள்.

அறியாமை, அழுக்காறு என்னும் இரட்டைத்தாளால் அடைக்கப்பட்டு, நன்கு முத்திரிக்கப் பெற்றிருந்த அகத்தினரான அவர்கள், அவரை ஜாதிப்ரஷ்டம் செய்து, ஒருவரும் நம்பி திருமாளிகைக்குப் போகாமலும், அவரை ஒருவர் அகத்திற்கும் வரவொட்டாமலும், விலக்கிவைத்தார்கள். பெரியநம்பியின் இதயப்பூங்கோயிலோ, ஜாதிகர்வத்தால் நேர்ந்த கலகத்தினின்றும் குழப்பத்தினின்றும் விலகி, மாசற்று, வேதசாஸ்த்ரங்களிலும் தூய்மையுடையதாய், பாகவதஸமய ஸாரமாகிய தெய்விக உண்மையிலேயே ஈடுபட்டிருந்தது.

இது நிற்க. ஸ்ரீரங்கத்திலே பண்டிதர்க்கும் பாமரர்க்கும் ஒருங்கே இன்பம் அளிக்கும் மஹோத்ஸவம் ஆரம்பமாயிற்று. எங்கு பார்த்தாலும் பாகவதப்பெருவெள்ளம். ஒரு நாள், திருத்தேர் பெரியநம்பிகள் வஸித்த வீதியே வந்துகொண்டிருந்தது. நம்பிகளது செல்வமகளார், அத்துழாயம்மாள், வெளியே முற்றத்தில் வந்தார். உடனே, அப்பெண் அரசு, நிலம்பொருந்த விழுந்து, 'பெண்மை வாய்' திறந்து, "உன் திருமார்பத்து மாலை நங்கை, வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை! நின் ஆணை, கண்டாய்?" என்றுகூறி, ரதத்தை மறித்துப் பின்வருமாறு முறையிட்டுக்கொண்டார்.

"நீ க்ருஷ்ணாவதாரத்தில், ஆயர்குலத்திலே, இடக்கைவலக்கையறியாது மாடுமேய்த்து வந்த பிள்ளைகளுடனே தழுவி

முழுகிப் புகுந்து ஒன்றாய்க் கலந்து அவர்கள் அன்பிற்கு வாயூறி நின்று எச்சில் பாராது போஜனம் செய்தாய்! மேலும் தாழ் குலத்தில் வளர்ந்து நல்லிசைப் புலமைவாய்ந்த நம் பாணநாதனை யும் நீ அங்கீகரித்துக்கொள்ள வில்லையா? மாறனேர் நம்பிகளுக்கு அடியேன் தகப்பனார், அவ்விதம் ஒன்றும் செய்யவில்லையே! மஹாநுபவரான மாறனேர் நம்பிக்கு மஹாபூர்ணராகிய பெரிய நம்பிகள், ப்ரம்மமேத ஸம்ஸ்காரம் செய்ததற்காக, இந்த திவ்ய தேசத்திலுள்ளார் யாவரும், எங்களை விலக்கிவைத்துத் தெரு வாசலில் முள்ளைப்போட்டுக் கலகம் செய்கிறார்கள், ஆகையால் பெரிய நம்பிகள் செய்தது சரியா, தப்பா? என்று தெரிவித்த பிறகே திருத்தேர் அப்பால் போகவேண்டும்.''

இங்ஙனம் ஆணையிட்டு, அறைகூவிக் குறைபிரந்து வேண் டிய அத்துழாயம்மை நிமித்தமாக, திருத்தேர் போகாமல் மாலைப் பொழுதுவரையில் அங்கேயே நின்று போயிற்று.

முடிவில், அர்ச்சகர், கந்தாடையண்ணன் என்ற ஓர்பெரிய வருக்கு இவ்விஷயமாக, எம்பெருமானது திருவுள்ளக் குறிப்பை வெளிட்டார். "பெரியநம்பிகளே, உமது தோளின்மேல் எழுந்தரு ளப் பண்ணிவாரும்!" என்று 'அண்ணனு'க்கு ஆணை பிறந்தது அப்படியே அவரும், பெரியநம்பி திருமாளிகைக்குட் பிரவேசி த்து, நம்பிகளைத் தமது தோளின்மேல் எழுந்தருளப்பண்ணி, தேர்த்தட்டில் கொண்டுவந்து விட்டார்.

அர்ச்சகரும், பெரியநம்பியை நோக்கி, "கருணைக்கடலான நம்பெருமான், நீர், மாறனேர்நம்பிக்குக் கைங்கர்யம் செய்ததற்காகத் திருவுள்ளம் உவந்து, மிகவும் கருணைகூர்ந்து உம்மைக் கடாக்ஷிக்கிறார்!" என்று முகமன் இயம்பினார்.

பெரிய நம்பிகள், வழக்கம்போல, திருமாலை முதலிய வரிசை யெல்லாம் பெற்று, கோஷ்டியில் எழுந்தருளி தமது உபதேசத்தாலும் உதாரணத்தாலும், நாட்டை வாழ்வித்தருளினார்.

